# மல்லுக்கட்டு

பால் இதமான சூட்டில் இருந்தது. அதில் கல்கண்டும், துளிபோல மிளகும் போட்டாயிற்று. ஃப்ளாஸ்கை எடுத்துவந்து அதில் பாலை ஊற்றினாள். ஒவ்வொரு முறையும் இது தேவை. பாட்டின் ஒலி அடங்கி கரவோசை எழுந்ததும் மெல்லத் திரும்புவார் அவள் பக்கம். அப்படித் தலையைத் திருப்புவது அவள் மனத்தில் உறைந்துபோயிருந்தது. தாடையின் சதை மடிப்புகள் தொங்கிய பருத்த கழுத்து. அதில் ஒரு மெல்லிய சங்கிலி. பாடி முடித்தபின் வரும் வியர்வை கழுத்தெல்லாம். சிவப்புப் பட்டுச் சால்வை இரு தோள்களையும் தொட்டபடி. கிருபானந்த வாரியார் போர்த்தியது. தலையைத் திருப்பிப் புருவத்தைச் சற்றே உயர்த்துவார். இவள் உடனே தம் பூராவை சிஷ்யன் கையில் தந்துவிட்டு, வெள்ளி டம்ளரில் பாலை ஊற்றுவாள் ஃப்ளாஸ்கிலிருந்து. அவரை நோக்கி நீட்டியவாறே, "பிரமாதமா இருந்துதுங்க" என்பாள் மெல்ல.

"உம்" என்பார்.

பாலைப் பருகுவார். ஒவ்வொரு முறையும் அதில் ஏதாவது சிறு குறை இருக்கும்.

'கல்கண்டை கொறைச்சிருக்கலாம்ல.' அல்லது 'மொளகை இப் பிடியா அள்ளிப் போடுவ.' அல்லது 'சூடு கம்மி.' இத்யாதி இத்யாதி.

மெல்ல முணுமுணுப்பாய்ச் சொல்வார். சிஷ்யன் காதில் விழும். அவன் இவளைப் பார்ப்பான் கடைக்கண்ணால். அவள் முகம் மாறவே மாறாது. "சரிங்க" என்பாள் பொதுவாய்.

திரும்பக் காரில் வரும்போது மெல்ல அவள் கரத்தைப் பற்றிக் கொள்வார். ஒரு ராக ஆலாபனையையோ, பாடலையோ, ஸ்வரப்ரஸ் தாரத்தையோ, நிரவலையோ குறிப்பிட்டு, "சரியா வந்திச்சா செண்பகம்?" என்பார்.

'ம்' என்றால் மட்டும் போதாது.

"அய்யா கத்துக்குடுத்தபடி இருந்திச்சா?" என்று துளைப்பார்.

சில நாட்கள் அவள் மௌனம் சாதிப்பாள். காரின் வெளியே பார்ப்பாள். வீதியை, வீடுகளை, தெருவில் நடப்பவர்களை வெறிப்பாள்.

"சொல்லேன்" என்று வற்புறுத்துவார்.

அன்று கச்சேரியில் ஏதாவது சிறு தவறு - மற்றவர்களுக்குப் புரியாதது - நடந்திருக்கும். மெதுவாக அதைச் சுட்டிக்காட்டியதும் முகம் தொங்கிப்போகும்.

"ஆமாமாம். ஒனக்குத் தெரியாமப் போகுமா? அய்யாவோட அருமை சிஷ்யப் பொண்ணாச்சே நீ?" என்று புறுபுறுப்பார்.

வீடு வரும்வரை பொருமல் நீடிக்கும். வந்ததும் மாறிப்போவார். குழந்தைகளோடு கேரம் விளையாடுவார். இரவுச் சாப்பாட்டில் பூண்டு அரைத்துப் போட்ட ரசத்தை உறிஞ்சிக் குடிப்பார் ரசனையுடன். இரவில் மென்மையாகத் தொடுவார். தம்பூராவைத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டு மீட்ட ஆரம்பிப்பார்.

"நீ பாடு ராசாத்தி" என்பார்.

அன்று மாலை தப்பு விழுந்த இடத்தையே பாடச் சொல்வார்.

அவள் பாடும்போது, "அம்மா, அம்மா" என்று அரற்றுவார். சில சமயம் தம்பூராவில் மண்டையை இடித்துக்கொள்வார். "கொல்லாதடீ, பாவி" என்று கத்துவார். "அய்யா, அய்யா" என்று தன் தந்தையை விளிப்பார்.

பிறகு அந்த முடிவற்ற உலாத்தல்கள் இரவில். வராந்தாவின் ஒரு முனையிலிருந்து மறுமுனைவரை. பாடி முடித்ததும் இவள் படுத்துக் கொள்வாள். உறங்கிப்போய்விடுவாள். சில சமயம் இரவில் எப்போதாவது முழிப்பு வந்து பார்க்கும்போது அவர் வராந்தாவில் இன்னமும் நடந்துகொண்டு இருப்பார். இவள் மெல்ல அருகில் போய் அவரைப் பின்னாலிருந்து தொடுவாள். உடனே கைகளைப் பின்னால் வளைத்து அணைத்துக்கொள்வார். அவர் முதுகில் இவள் முகமும், மார்பும், தோளும் அழுந்த நிற்பாள். சில சமயம் சிறிது நேரத்துக்குப் பின் அவளுடன் நடந்து வந்து பக்கத்தில் படுப்பார் அணைத்தபடி. அது கலவிக்குச் செல்லும் சில சமயம். அப்போது அவள் உச்சத்தை எட்ட வேண்டும் என்று மிக முனைப்புடன் இயங்குவார். அவள் திருப்தியை மீண்டும்மீண்டும் கேட்டு உறுதி செய்துகொள்வார். வராந்தாவில் பாயை விரித்து அதில் தனியாகவும் படுப்பார் சில சமயம். அவளைப் பாடச் சொன்ன பாட்டை வாய் முனகியவாறு இருக்கும். காலையில் சிஷ்யப் பட்டாளம் வந்துவிடும். அவரைச் சூழ்ந்துகொள்ளும்.

"அண்ணி, அண்ணாச்சிக்கு வெந்நீர்", "அண்ணி, அய்யா காப்பி கேட்கிறார்", "அண்ணி, மிளகு ரசம் வேணுமாம்" என்று விண்ணப்பங்கள் வந்தவாறிருக்கும். மாணவர்களை ஒரு திரையாக எழுப்பி அவர் மறைந்துகொள்வார். நேராக எதிரில் வந்தால் பார்க்காமல் இருப்பார். இரவுக்குள் மூட்டம் கலைந்துபோகும். வழக்கமான சிரிப்பும், கேலியும் கிளம்பும். இது ஒரு விளையாட்டுப் போல நடந்தது. நடுவர் இல்லாத ஆட்டம். விதிமுறைகள் இல்லாத, ஆடுபவர்களே உணராத ஆட்டம். வெற்றி தோல்வியை வரையறுக்க முடியாத ஆட்டம். வென்றவர்களைத்

தோற்றவர்களாகவும், தோற்றவர்களை வென்றவர் களாகவும் மாற்றிவிடும் ஆட்டம்.

o o o

வரவேற்பறையில் அய்யாவின் படம் மாலை மாட்டப்பட்டு இருந்தது. கதிர்வேல் பிள்ளை எல்லோருக்கும் அய்யாதான். அவர் கலைஞானம் மிகுந்த இசை வேளாளப் பரம்பரையில் வந்த கலைஞர். அவர் தாயார் வைர லோலாக்கும், சிவப்புக்கல் அட்டிகையும் போட்டு, வெறும் மைதீட்டிய விழிகளுடனும், வெற்றிலை மென்று சிவந்த உதடுகளுடனும் ஆடினாலே போதும், கும்பகோணமே மயங்கிப்போகும் என்பார். சாமி ஊர்வலத்தில் அவள் தெருவில் ஆடியதையும் அவர் பார்த்தது உண்டு. "அந்தத் தெரு நல்ல அகலமா இருந்ததா ஞாபகம் எனக்கு, செண்பகம். நல்ல அரக்குக் கலர் புடவையும், பச்சை ரவிக்கையுமா அம்மா தெரு கூடற இடத்துல நவசந்திக் கவுத்துவம் ஆடினது இன்னமும் கண் முன்னால் நிக்குது. காஸ்லிட் விளக்கு தோள்ல தூக்கிட்டு ரெண்டு பக்கமும் ஆட்கள் நடப்பாங்க. கூட்டமான கூட்டமா இருக்கும். அம்மா ஆடறப்போ அந்தத் தெரு விரிஞ்சிட்டே போற மாதிரி எனக்கு அப்போ தோணிச்சு" என்று அதைப் பற்றிச் சொல்வார். ரொம்ப வருஷம் கழித்துப்போய்ப் பார்த்தபோது இரண்டு பக்கமும் சாக்கடைகளோடு அந்தத் தெருக் கூடல் குறுகலாகப் பட்டதாம். அம்மாவின் ஆட்டம் என்ற உடை இல்லாமல் தெரு அம்மணமாகத் தன்னை வெளிப்படுத்திக்கொண்டு இருந்தது என்பார்.

அய்யாவின் அம்மா கனகாம்பாள் காந்தியைப் பார்க்கச் சென்னை வரை வந்தாள் அய்யாவையும் கூட்டிக் கொண்டு. சென்னைக் கடற்கரையில் கூட்டம் அலை மோதியது. அய்யாவைத் தன் முன்னால் நிற்கவைத்து, அவர் தோளை இறுகப் பற்றியவாறு அவள் பல மணி நேரம் நின்றாளாம். திரும்ப ரயிலில் வந்தபோது அவள் அதிகம் பேசவில்லை. அடுத்த முறை ஆடியபோது அவள் கதர்ப் புடவை கட்டிக்கொண்டு ஆடினாளாம். கோயில் நிர்வாகத் தினர் இதுபற்றிக் கேட்டபோது, "பட்டுக் கட்டணும்னு எந்த சாஸ்தி ரத்துல எழுதியிருக்குது? நான் வெறும் கூத்தாடி இல்லய்யா. உப்புப் போட்டு சாப்பிடுகிற மனுஷி" என்று அவர்களை மடக்கினாளாம். ராமாமிருதத்தம்மையாருடன் அவள் பின்னாளில் நெருங்கிப் பழகிய போது பல சுயமரியாதைக் கூட்டங்களுக்கு அவருடன் சென்றாள். அய்யாவுக்குப் பத்து வயது இருக்கும்போது வக்கீல் கோவிந்தராஜ முதலியார் தவிர வீட்டில் மற்ற ஆண்கள் வருவது போவது நின்று போயிற்று. முதலியார் நல்ல தமிழ் வித்வான். மாலை நேரங்களில் அய்யாவைப் பக்கத்தில் இருத்திக்கொண்டு தேவாரம், திருப்புகழ் ராகத்துடன் படிப்பார். முறையாக அய்யாவுக்குப் பாட்டு அப்போது தான் ஆரம்பித்தார்கள். அம்மாவின் ஆட்டம் குறைந்துகொண்டே வந்து தேவதாசித் தடைச் சட்டத்தின்பின்

நின்றேபோயிற்று. அதை அவள் பொருட்படுத்தியதாக அப்போது படவில்லை. அய்யாவுக்குப் பாட்டின் நுணுக்கங்களைச் சொல்லியவாறும், அவர் குருவுடன் பலவாறு சர்ச்சை செய்தபடியும் உற்சாகமாக இருந்தாள். முதலியார் மட்டும் சில சமயம் மாலைகளில் அவளை ஏதாவது தமிழ்ப் பாடலுக்கு அபிநயம் பிடிக்கச் சொல்வார். முதலியார் கனகாம் பாளுக்கு வேண்டிய நிலபுலன்களை எழுதிவைத்தார். ஒரு நாள் மாலை முதலியார் மாரடைப்பில் இறந்துபோய்விட்டதாக ஆள் வந்து சொன்னபோது கனகாம்பாள் தூணில் சாய்ந்து சிறிது நேரம் நின்றாள். வீட்டின் நிலவரம் மாறவில்லை. வசதியாகவே இருந்தார்கள். அய்யாவுக்கு அப்போது பதினேழு பதினெட்டு வயது இருக்கும். முதலியாரும் அம்மாவுமாக கும்பகோணம் ஸ்டுடியோ ஒன்றில் ஒரு புகைப்படம் எடுத்துக்கொண்டிருந்தார்கள். முதலியார் நாற்காலியின் இரு பக்கமும் கைகளை விரித்துப்போட்டு நிமிர்ந்து உட்கார்ந்தி ருந்தார். அம்மா அவர் பின்னால் ஒரு பக்கத்தில் நாற்காலியின் முதுகில் ஒரு கை பட்டும் படாமலும் வைத்தபடி. இன்னொரு கை கீழே தொங்கியது. முன்னறையை ஒட்டிய ரேழியின் இடது மூலையில் சுவரில் தொங்கியது அந்தப் படம். அதை இடம் மாற்றவில்லை கனகாம்பாள். உடல் நலம் குன்றிப்போய் படுக்கையில் இருந்த போது அவள் கண்கள் அலைந்தவாறிருந்தன. அவள் கண்கள் தேடுவது அந்தப் புகைப்படத்தைத்தான்; ரேழியில் அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் போகும்போது கண்ணில் பட்டவாறு இருந்த அதைத்தான் என்று அய்யா நினைத்தபோது, அவள் அய்யாவை அருகில் அழைத்துத் தன் சலங்கைப் பெட்டி வேண்டுமென்று கேட்டாளாம். கொண்டுவந்ததும் அந்தப் பெட்டியிலிருந்து சலங்கையை எடுத்துக் குழந்தையைப் போட்டுக் கொள்வதைப் போல் பக்கத்தில் போட்டுக்கொண்டுத் தடவித்தந்தாளாம், மெல்லிய சலங்கை ஓசை சிணுங்கலைப் போல் எழும்பும்படி. மறுநாள் காலை அவள் இறந்துபோனாள்.

ஒரு கதை மாதிரி அய்யா கூறுவார் தன் அம்மாவைப் பற்றி. அம்மாவும் முதலியாரும் எடுத்துக்கொண்ட புகைப்படம் அவர் அறையில் இருந்தது.

இவளுக்கு ஐந்து வயது இருக்கும்போது இவள் தாயார் இவளை அய்யாவிடம் அழைத்து வந்தாள். கணவர் இறந்தபின் சில வீடுகளில் சமைத்துப் பிழைத்துக்கொண்டிருந்தாள் அம்மா. பாடப் பிடிக்கும். பூபாளத்தைக் காலையிலும், நீலாம்பரியை இரவிலும் முனகியவாறு இருப்பாள். முறையாக எதையும் பயில வாழ்க்கை இடமளிக்கவில்லை. கோவில் கச்சேரி எதுவும் விடாமல் போவாள். இவளின் அந்த வயது நினைவெல்லாம் இசையைச் சார்ந்ததாகவே இருந்தது. கத்தியைச் சாணைபிடிப்பவன் 'சாணைபிடிக்கறது . . .' என்று முழக்கி விட்டுக் கிர்கிர் என்று கத்தி வைத்துச் சாணைபிடிப்பது தாளத்துடன் இணைந்த இசை அமைப்பாய் இவளுக்குப் படும். அம்மாவைக் கூப்பிட்டுச் சொல்வாள். மர ஸ்டூலில் உட்காரவைத்து எண்ணெயைத்

தலையில் தேய்த்து, இவள் கையில் ஒரு சொம்புத் தண்ணீர் கொடுத்து, தலை தேய்க்க ஆரம்பிப்பாள் அம்மா. இவள் தண்ணீரில் சளக்பளக் கென்று சத்தமெழுப்புவாள் விரல்களை விட்டு அளைந்து. தண்ணீரில் தன் பக்கமாக இரண்டு முறை, எதிர்ப்பக்கமாக நான்கு முறை விரல் களை அசைத்து ஒலியெழுப்பி, "அம்மா, என்ன பாட்டு சொல்லு?" என்பாள்.

"யாருக்குடி தெரியும்?"

"தெரியலையாம்மா? 'வர வீணா'."

"சரிதான் போ."

"அப்புறம் இது? சளக் சளக் சளக் பளக் பளக் பளக்"

"தெரியலை போ." அம்மா தலையை அழுத்தித் தேய்ப்பாள்.

" 'ஒருமையுடனே நினது'ம்மா. தெரியலை?"

அம்மா சிரித்துவிடுவாள்.

அய்யாவின் இசை, அவர் குணம்பற்றி ஊரில் எல்லோருக்கும் தெரியும். அம்மா ஒருநாள் தைரியமாக இவளைக் கூட்டிக்கொண்டு போனாள். திண்ணையில் வந்தமர்ந்த அய்யா அம்மாவைப் பார்த்து, "என்னம்மா?" என்றார்.

"இவளுக்குப் பாட்டு கத்துக்குடுக்கணும்."

"அதெல்லாம் சரிப்பட்டு வராதும்மா. போய்ட்டு வாங்க. படிக்கப் போடுங்க புள்ளய. படிச்சிட்டு முன்னுக்கு வரட்டும். பாட்டுக்கு உழைப்பு வேணும். உசுரக் குடுக்கணும். முடியாதும்மா அதெல்லாம்."

அய்யா உள்ளே போய்விட்டார்.

அம்மா போகவில்லை. நின்றபடி இருந்தாள். இரண்டொரு மணி நேரத்திற்குப் பின் வெளியே வந்த அய்யா அம்மாவைப் பார்த்துத் திகைத்தார்.

"போகலியா நீங்க? என்னம்மா இது?"

"பாட்டுக் கத்துக்குடுங்க. இவ இங்கியே இருக்கட்டும், உங்க பொண்ணு மாதிரி."

அய்யா இவளைப் பார்த்தார். அவள் அன்று உடுத்த உடை நினைவிருந்தது. கறுப்புக் கரையுடன் கட்டம் போட்ட பச்சை நூல் பாவாடை. தோள் பக்கம் எழும்பிய குட்டைக் கை மஞ்சள் சட்டை. தலையை அழுந்த வாரி, ஒரு பக்கம் ஒரு கொத்து முடியை ரிப்பனால் கட்டிப் பூச் சுற்றியிருந்தாள் அம்மா. காலில் செருப்புக் கிடையாது. கால்களைச் சற்று அகட்டி வைத்து நின்றுகொண்டு இவளும் அவரை வெறித்துப் பார்த்தாள்.

"ஒரு பாட்டுப் பாடு பாப்பம்" என்று உத்தரவிட்டார்.

அம்மா இவளுக்கு நன்றாக பயிற்சி கொடுத்து அழைத்து வந்திருந்தாள். அய்யா அந்தச் சமயம், சிறு பெண்ணான சீதை தன் உண்மையான தாய் தந்தை யார் என்று கேட்பது போல் ஒரு

பாட்டை எழுதி மெட்டமைத்திருந்தார். ஆனந்தபைரவியில் இழைந்து இழைந்து வரும். "பூமி என் தாய் என்றால் ..." என்று ஆரம்பிக்கும். அவரே அதை இருமுறை பாடியிருந்தார் கோவிலில். இவள் அதைப் பாடினாள் கையைக் கட்டிக்கொண்டு நின்றபடி. ஆடாமல் அசையாமல் எதிரே நோக்கியபடி பாடினாள். பாடி முடித்ததும் அய்யா மௌனமாக இருந்தார். பிறகு மிகவும் கனிவான குரலில், "இங்க வா" என்றார்.

வேகமாக நடந்து அருகில் போனாள். அவளைத் தூக்கித் திண்ணையில் தன்னருகே அமர்த்திக்கொண்டார். தலையைத் தடவிக்கொடுத்தார். பிறகு அம்மாவைப் பார்த்தார். அவர் அம்மாவுடன் பேசி முடிப்பதற்குள் இவள் அவர் தொடையில் தலைவைத்துத் தூங்கிப் போயிருந்தாள்.

அதைப் பலமுறை சொல்வார் பிறகு. "ஏதோ நீ வர வேண்டிய இடத்துக்கு வந்திட்ட மாதிரி என் தொடையில தலைவச்சுப் படுத்தே" என்பார்.

பிறகு விடாத பாட்டுப் பயிற்சி. அய்யாவின் பையன் ஷண்முகம் இவளைவிட நான்கு வயது பெரியவன். அவனுடன் இவளைப் பாடவைத்தார். அம்மா இரண்டொரு மாதங்களில் டெல்லிக்கு ஒரு தென்னிந்தியக் குடும்பத்துக்குச் சமைத்துப்போடப் போய்விட்டாள். பணம் அனுப்புவாள். வருடம் ஒரு முறை வருவாள். பாடச் சொல்லிக் கேட்பாள். இவளின் முதல் கச்சேரிவரை அம்மா இருந்தாள். மற்றபடி அய்யாவின் பெண்ணாகவே வளர்ந்தாள். அய்யாவின் மனைவி நாகம்மாள் இவளுக்கு அம்மாவானாள். நாகம்மாளுக்குத் தமிழ் இலக்கியத்தில் நல்ல ஈடுபாடு இருந்தது. அய்யாவிடம் இசையும், நாகம்மாளிடம் இலக்கியமும் பயின்றாள் என்று சொல்லலாம்.

அய்யாவுக்கு நிதமும் ஒரு புட்டி சரக்குத் தேவை மாலை வேளைகளில். சங்கீத நண்பர்களுடன் அல்லது தனியாக அமர்ந்து விடுவார். அந்த வேளைகளில் சங்கீதக் கதைகள், வம்புகள், புதுக் கீர்த்தனை என்று எல்லாம் நடக்கும். தன் தாயாரைப் பற்றிக் கூறியது அந்தச் சமயங்களில்தான்.

அவளுடைய பாட்டு, பேச்சு, சண்டை, சமாதானம் எல்லாம் ஷண்முகத்துடன்தான். ஷண்முகம் சற்றுச் சோம்பேறி. நிதானமாக சாதகம் செய்வான். 'என் அய்யா பாட்டு எனக்கில்லாமல் வேறு யாருக்கு?' என்பதுபோல் அலட்சியமாகக் கற்றுக்கொள்வான். ரத்தத்தின் மூலமாகத் தனக்குள் ஏற்கெனவே எல்லாவற்றையும் செலுத்தியாகிவிட்டது, தான் எந்த விதத்திலும் சிரமப்பட வேண்டிய அவசியமில்லை என்று தன்னை எந்த விதத்திலும் வருத்திக்கொள்ள மாட்டான். இவளும், அங்கு தங்கிப் படித்த இன்னும் சில மாணவர்களும் காலை நான்கு மணிக்கு எழுந்து குரல் வளத்துக்காகச் செய்யும் சாதகங்களில் ஷண்முகம் பங்கெடுத்துக் கொள்ள மாட்டான். அவன் குரலும் இதற்கெல்லாம் அவசியமில்லை என்பதுபோல் அருவியாய் ஓடியது.

இசையுடன் அவள் ஒரு வாத்தியமும் பயில வேண்டும் என்று வீணை கற்றுக்கொடுக்கத் தொடங்கினார் அய்யா. அவளைக் காய்கறி நறுக்குவது, பாத்திரம் கழுவுவது போன்ற வேலைகளைச் செய்ய விடமாட்டார். விரல்கள் தேய்ந்துவிடும் என்பார். நாகம்மாளுக்கு ஏதாவது உடல் அசௌகரியம் என்றால் தன்னிடமிருந்து படிக்கும் மாணவர்கள் வேலை செய்யவேண்டும் என்று எதிர்பார்க்க மாட்டார். ஷண்முகத்தின் உதவியோடு தானே எல்லாமும் செய்வார். இலை போடுவது, குடிக்க நீர் வைப்பது போன்றவற்றைத் தவிர இவள் வேறு வேலைசெய்யக் கூடாது. அப்படி அவள் விரல்களைப் பாதுகாப்பார்.

"அவ சோம்பேறியாப் போயிடுவா" என்று முணுமுணுப்பான் ஷண்முகம். "பேசாம நானும் பாட்டோட வீணையும் கத்துக்குறேன். வீட்டு வேலைசெய்ய வேண்டாமில்ல?" என்பான்.

"அவகூட உனக்கு என்னடா போட்டி?" என்பார் அய்யா.

அவர் பார்க்காதபோது இவள் தலையில் ஒரு தட்டுத் தட்டுவான். இவள் பாடும்போது பின்னலை இழுத்து கவனத்தைச் சிதற வைப்பான். இவள் முகம் அழுகையில் கோணுவதைப் பார்ப்பது அவனுக்கு ஒரு விளையாட்டு. ஆனால் மரமேறி மாங்காய் பறிப்பது, வெள்ளரிப் பிஞ்சுகளைத் தோட்டத்திலிருந்து எடுத்துவருவது, நாகம்மாள் உறங்கும் மத்தியான வேளைகளில் சமையலறையிலிருந்து தேங்காயும் வெல்லமும் திருடி வந்து தருவது இதெல்லாமும் அவன் செய்தான் அவளுக்காக.

அவள் பெரியவளான அன்று சற்று மிரண்டுவிட்டாள். பின்னாலிருந்த அறை ஒன்றின் சன்னலருகே நின்றுகொண்டிருந்தாள் தனியாக. தொடைகள் கனப்பது போலிருந்தது. அவளை மூன்று நாட்கள் தனியாக்கிவிடுவார்களா? அவள் பாடலாமா? வீணையைத் தொடலாமா? அய்யாவின் அறையிலிருக்கும் புத்தகங்களைப் படிக்கலாமா?

எங்கோ டெல்லியிலிருக்கும் அம்மா நினைவும் வந்தது. கடந்த முறை வந்தபோது அம்மா அவளிடம் இதுபற்றிக் கூறியிருந்தாள். சந்தன வண்ணத்தில் ஊதாப் பூக்கள் அச்சிட்ட ஒரு சீட்டித் தாவணியை நாகம்மாளிடம் தந்துவிட்டுப் போயிருந்தாள். அதைத் தான் கட்டிக் கொண்டு நின்றுகொண்டிருந்தாள். அவள் பாட வேண்டுமே! அவள் வீணையைத் தொட வேண்டுமே! அய்யா அறையிலுள்ள தடிமனான புத்தங்களைப் பூனைக்குட்டி மாதிரி மடியில் போட்டுப் பக்கங்களைப் புரட்ட வேண்டுமே!

சிறிது நேரத்துக்குப்பின் அய்யா வந்தார். நேரே அவளிடம் வந்து அவள் தலையைத் தன் நெஞ்சில் சாய்த்துக்கொண்டு, "என் செல்ல ராசாத்தி" என்றவுடன் இவள் அழத் தொடங்கினாள். எப்படிப் புரிந்துகொண்டாரோ இவள் மனநிலையை. "பாடலாமா, வீணையை, புஸ்தகத்தை எல்லாம் தொடலாமான்னுட்டு பயப்படறியா?" என்று கேட்டார். இவள் தலையை ஆட்டினாள். "அசடு, இதுக்கும் அதுக்கும் என்ன சம்பந்தம்? இப்படித் தனியா யாரு நிக்கச் சொன்னது? வீணை, புஸ்தகம் எல்லாம் யாரும் எப்ப வேணுமின்னாலும் தொடலாம்.

வா வெளியில" என்று கையைப் பிடித்து அழைத்துச் சென்றார். வேலையாயிருந்த நாகம்மாளிடம், "நாகு, இதை ஒதுங்கச் சொல்லாதே. உனக்குத் தெரியுமே, எனக்கு அதெல்லாம் பிடிக்காதுன்னுட்டு" என்றார். "சரிங்க" என்ற நாகம்மாள் இவளைப் பார்த்துப் புன்னகைத் தாள். "நான் சொல்லல. அதுவே போய் நின்னுகிச்சு. எத்தனை சொன்னாலும் வரல" என்றாள்.

கூடத்தில் ஜமக்காளத்தை விரித்துத் தம்பூராவைக் கையில் தந்தார். ஷண்முகத்தையும் மற்ற மாணவர்களையும் அழைத்தார். எல்லோரு மாக வழக்கம்போல் பாடினர். அவள் தாவணியையும் பார்த்தனர். இதுவரை அவள் வாழ்வில் இருந்த விஷயங்களோடு எந்த வித பலவந்த முறிவையும் ஏற்படுத்தாமல் அந்த விஷயம் கலந்துபோனது.

அய்யா முதல்முதலாகத் தன்னுடன் கச்சேரியில் பாடத் தன் மாணவர்களிலிருந்து அவளை அழைத்துப்போனது ஷண்முகத்துக்குச் சற்று மனத்தாங்கலை ஏற்படுத்தியது. அவனும் உடன் வந்தான். ஆனால் பாடவில்லை. அதை அவர் வேண்டுமென்றே செய்தார் என்று தோன்றியது. இரண்டு நாட்களுக்கு முன்பு மத்தியான வேளையில் வெளியூரிலிருந்து ஒரு நபர் அய்யாவைக் கச்சேரிக்கு ஒப்பந்தம் செய்ய வந்திருந்தார். அய்யா தூங்கிக் கொண்டிருந்தார். அவரைத் திண்ணை யில் உட்காரவைத்த ஷண்முகம், உள்ளே போய் பிறகு அதை மறந்து விட்டான். இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு அய்யா வெளியே வந்தபோது அந்த நபர் அங்கேயே அமர்ந்திருந்தார். அய்யாவைப் பார்த்துக் கும்பிட்டுவிட்டு, தாகமாக இருக்கிறது என்றார். அவர் வந்து இரண்டு மணி நேரமாகிவிட்டது என்றறிந்த அய்யா விடுவிடென்று உள்ளே சென்று, "செண்பகம்" என்று இரைந்து கூப்பிட்டார்.

அவர் அறையில் அமர்ந்து புத்தகங்களை ஷண்முகத்துடன் பார்த்துக் கொண்டிருந்த செண்பகம் அந்தக் குரலின் கோபத்தை அறிந்து வெளியே வந்தாள்.

"கூப்பிட்டீங்களாய்யா?"

"ஏம்மா, திண்ணையில ஆள உக்காத்திட்டு விசாரிக்கிறது கெடையாதா? நடுப்பகல் நேரம் வெளியூர்லேந்து வந்திருக்காரு. சாப்பிட்டாரா கொண்டாரானுட்டுக் கேக்க வேண்டாம்? அங்க என்ன பண்ணியாவுது?"

ஷண்முகம் வெளியே வந்து, "நான்தாய்யா உக்காத்தினேன். மறந்திட்டேன். பெரிய கச்சேரி மாதிரி படலை. அவரு உடை போட்டுருக்கறதைப் பாத்தா தேங்கா மூடிக் கச்சேரியா இருக்கலாம்னு தோணுது" என்று விளையாட்டாகச் சொல்லிக்கொண்டே போனான்.

தோளில் இருந்த துண்டை அவன் முகத்தில் வீசி எறிந்தார் அய்யா. உள்ளே போய் ஒரு சொம்புத் தண்ணீரும், தட்டில் தின் பண்டங்களும், பழமும் எடுத்து வந்தார். திண்ணையில் வைத்துவிட்டு, "மன்னிக்கணும். பையன் மறந்திட்டான் சொல்ல" என்றார். கச்சேரியை ஒப்புக்கொண்டார். அவர் போனவுடன் உள்ளே வந்து ஷண்முகத்

திடம், "பாடறவனுக்கு ஆணவம் கூடாதய்யா" என்றார். அவன் பேசவில்லை. செண்பகத்தைப் பார்த்துப் புருவங்களை உயர்த்தி உதட்டைப் பிதுக்கினான்.

அந்தக் கச்சேரிக்குத்தான் முதன் முதலாய்த் தன் மாணவர்களி லிருந்து செண்பகத்தை அழைத்துப் போனார். அவளைத் தன் கூடப் பாடவைத்துப் பின்பு தனியாகவும் இரண்டு கீர்த்தனைகளைப் பாடச் சொன்னார். அது ஒரு சிறிய கிராமம். பிரதான வீதி ஒன்றைப் போட்டு முடித்திருந்தார்கள். அதைக் கொண்டாடத்தான் கச்சேரி. மைக் செட், சுற்றிலும் சிறு மின்விளக்குகள் தவிர மின்சார உபயோகம் தென்படவில்லை. அதிக ஒளியை உமிழும் விளக்குகள் இல்லை. எப்போதாவது யாராவது டார்ச் விளக்கைப் பிடித்தவாறு எழுந்து போனால், சில வெள்ளைச் சட்டைகளும், வண்ணப் புடவை ரவிக்கைகளும், மடியில் உறங்கும் குழந்தைகளின் தொடையில் அழுந்திய கன்னங்களும் அந்த ஒளிவட்டத்தில் சிக்கின. சபையினருக் கும் மேடையில் இருந்த அவர்களுக்கும் இடையே முதலிரு நிமிடங் களிலேயே ஒரு பாலம் அமைந்துவிட்டது. அதில் போய்போய் அவர்களைத் தொட முடிந்தது. அய்யா பாடி முடித்ததும் கரவோசை ஏதும் எழவில்லை. ஒரு முதியவர் முன்னால் வந்து, "அய்யா, உங்க பாட்டுக்கு அடங்கி இங்க உட்காந்திருந்தோம். எனக்கு எம்பது வயசு ஆவுது. அடுத்த சன்மம்னுட்டு ஒன்னு இருக்கா இல்லியானுட்டு ஒன்னும் புரியலை. அப்பிடி ஒன்னு இருந்திச்சின்னா உங்க வீட்டுல நான் புள்ளயா வந்து பொறக்கோணுங்க. பாட்டு கேட்டுக்கிட்டே இருக்கோணும்" என்று விட்டு அய்யாவின் வழக்கத்தைத் தெரிந்து வைத்துக்கொண்டு, ஒரு சிறு புட்டியை நீட்டினார். அய்யா மறுக்க வில்லை. ஆனால் அவர்கள் பணம் வைத்து நீட்டிய தட்டிலிருந்து தேங்காய் மூடியை மட்டும் அய்யா எடுத்துக்கொண்டார். "அந்தப் பணத்துல இனிப்பு வாங்கி, அழாம, எந்தத் தொல்லையும் தராம இருந்த குழந்தைகளுக்குக் குடுத்துடுங்க" என்றார்.

மாட்டு வண்டியில் இரவு வயல்கள் மற்றும் மரங்களூடே நெளிந்த வீதிகளில் மெல்ல வந்தபோது, "ஷண்முகம், செண்பகத்தைப் பாட வெச்சது உன்னை தண்டிக்கிறதுக்குன்னிட்டு நினைச்சிக்காதே. அன்னிக்கு நடந்ததுக்கும் இதுக்கும் சம்பந்தமில்லை. செண்பகம் உங்க எல்லாரையும் தாண்டி ரொம்ப தூரம் போயிட்டா. அவ உழைச்ச உழைப்பு அப்பிடி" என்றார்.

அதன் பின்புதான் ஷண்முகம் அசுர சாதகம் செய்ய ஆரம்பித் தான். செண்பகத்துக்கு அரங்கேற்றம் செய்தார் அய்யா. ஊரிலேயே ஒரு பள்ளிக்கூடத்தில் சின்னதாக, ஆரவாரமில்லாமல் செய்தார். மறக்காமல் அவள் அம்மாவை அழைத்தார். அரங்கேற்றத்தில் அவள் அய்யாவை ஆச்சரியத்திலாழ்த்த ஒரு விஷயம் வைத்திருந்தாள். மரங்கள் அடர்ந்த வனத்தில் ஆடும் மயிலின் ஆட்டத்தை விவரித்து ஒரு வர்ணத்தை ராகமாலிகையாகச் செய்து விநாயகர் துதிக்குப் பதிலாக அதைப் பாடினாள். "கதிர்வேல் நாகமிருவர் மகள் செண்பகம்

மனம் மகிழ" என்று தன் முத்திரையையும் இட்டிருந்தாள் அதில். வீட்டுக்குத் திரும்பியதும், "விநாயகர் வணக்கம் செய்யாம பாடுறது ஆணவம் இல்லையா அய்யா?" என்று கேட்டான் ஷண்முகம். "இல்லடா. அது ஞானச் செருக்கு. அது வேணும்டா" என்றார் அய்யா. அவள் இட்ட முத்திரையை அம்மா மிகவும் ரசித்தாள். அம்மாவின் பெயர் நாகவல்லி. நாகமிருவர் என்று சொல்லி அவளையும் தன்னுடன் பிணைத்துக் கொண்டது அவள் சமைத்த சமையலுக்கு எல்லாம் ஈடு செய்தது. அடுத்த கச்சேரிக்கு அம்மா இருக்கவில்லை.

அவளுக்கு வருடத்துக்கு ஐந்தாறு கச்சேரிகளாவது வந்தன. ஷண்முகம் அய்யாவுடன் பாடத் தொடங்கி, தனியாக அரங்கில் ஏறி, தனிக்கச்சேரியும் பண்ண ஆரம்பித்தான். எந்தத் தருணம் அவர்களுக்குள் பிணைப்பு ஏற்பட்டுப்போயிற்று என்று தெரியவில்லை. அது புரியாமலேயே உள்ளுக்குள் ஊறிக்கொண்டிருந்தது போலும். அய்யா அவள் திருமணம் பற்றிக் கேட்டபோது அவள் ஒன்றும் சொல்லவில்லை. "நீ கச்சேரி செய்யறதத் தடுக்கறவனை நீ கட்டக் கூடாது. அவன் உன் பாட்டை மதிக்கணும்" என்றார். அவள் சாதியில் மாப்பிள்ளை பார்ப்பதா என்ன செய்வது என்று கேட்டதற்கும் அவள் பதில் கூறவில்லை. அவளுக்கு பதில் தெரியவில்லை. அய்யா சொல்வதைக் கேட்டுவிட்டு அவள் திரும்பும்போது ஷண்முகம் உள்ளறைக்குப் போகும் ரேழியில் அவளிடம் சொன்னான் -

"செண்பகம், நீ எப்படி வேற மாப்பிள்ளை பாக்கலாம்? நீ என்னெத்தான் கல்யாணம் கட்டணும்."

அவளுக்குள் ஓர் உவகை பொங்கியது. வேகமாக நடந்துபோய் அவனை இறுக அணைத்துக் கொண்டாள். சட்டை போடாத அவன் மார்பில் தன் முகத்தைத் தேய்த்தாள்.

அவர்கள் விருப்பத்தை அய்யாவிடம் தெரிவித்தபோது அவர் தன் பதிலை உடனே சொல்லவில்லை. நாகம்மாள் மகிழ்ச்சியுடன் இவளைக் கட்டிப் பிடித்துக்கொண்டாள். ஷண்முகத்திடம் இரண்டொரு வருடங்கள் போகட்டுமே, என்ன அவசரம் என்றார் அய்யா.

"தீர்மானம் செய்திட்ட பிறகு ஏன் தள்ளிப் போடணும்?" என்றான் அவன்.

"அவளுக்கு இன்னும் கொஞ்சம் வயது கூடட்டுமே" என்றார்.

ஷண்முகமும் அவளும் தொங்கிய முகங்களோடு வளைய வந்தனர் இரண்டு நாட்கள். அதன் பின்னர் அய்யா திருமண நாளைக் குறிக்க முற்பட்டார். அதன்பின் இரு மாதங்கள் ஒருவரையொருவர் தொடுவதிலும், அறிவதிலும், வியப்பதிலும், சுகிப்பதிலும் போயிற்று. பொங்கிப்பொங்கி வந்தது ஆனந்தம். புதிதாக ஒரு பாட்டும் பாடம் செய்யவில்லை. மூன்றாம் மாதம் வெளியூர்க் கச்சேரி அழைப்பு வந்தது அவளுக்கு. ஒப்புக்கொண்டு தந்தி அடித்தபின் என்ன பாட வேண்டும் என்று திட்டமிட்டு அய்யாவிடம் பேச உட்கார்ந்தாள். அய்யா அதில் சில மாற்றங்கள் செய்து தந்தார். புது உருப்படிகள் இரண்டு கற்றுத் தருவதாகச் சொன்னார்.

சாப்பிடும்போது ஷண்முகத்திடம் புது உருப்படிகள்பற்றிச் சொல்லி இருவருமே கற்றுக் கொள்ளலாம் என்றதும், "செண்பகம் கச்சேரி செய்யப்போவுதா?" என்று கேட்டான் ஷண்முகம்.

"ஏன் கச்சேரி செய்யாம சமையலா செய்வா?" என்றார் அய்யா.

"இல்லய்யா. அவ எதுக்கு ஓடணும் அங்க இங்க? வீட்டுல பாடட்டுமே எவ்வளவு வேணுமின்னாலும். கச்சேரின்னா அவ களைச்சுப் போயிடுவா. ஓட்டமெல்லாம் எனக்கே இரிக்கட்டும். அவ ஓய்வா இரிக்கட்டும்" என்றான்.

அய்யா பேசாமல் சாப்பிட்டார். அவள் அவர் அறையில் குடிக்க நீர் வைக்கப் போனபோது வெடுக்கென்று திரும்பினார். "போ. போ. குடித்தனம் பண்ணு. புள்ள பெத்துக்க" என்றார்.

அவள் பேசாமல் நின்றாள். கண்கள் கலங்கின.

"ஏன் அழுவறே பாவிப் பொண்ணே?" என்றார்.

"புது உருப்படி சொல்லித் தருவீங்களா?"

"நாளைக்கு ஆரம்பிக்கலாம் போ" என்றார் கோபமில்லாமல்.

இறக்கும்வரை அவர் கற்றுத்தருவது நிற்கவில்லை. வெளி உலகில் அவர் இசையின் வாரிசு ஷண்முகம் என்றார்கள். விருதுகள், பட்டங்கள், பொன்னாடைகள், புகழாரங்கள் என்று வந்தவாறிருந்தன. வீட்டில் செண்பகமும் அவனும் சேர்த்து பாடிய தினங்கள் மெல்ல மறைந்தன. கச்சேரிகளோடு பல ஜபர்தஸ்துகள் கூடின. மாணாக்கர்கள், முகஸ்துதி பேசுபவர், உண்மையான கலைஞர் என்று ஒரு பெரிய உலகினுள் அவன் புகுந்தான். செண்பகம் அவனுடன் வாழ்ந்தாள். அவனை ஒட்டி நின்றாள். பின்னாலிருந்து பாலை நீட்டினாள். ஆனால் கண்ணுக்குப் புலப்படாத ஓர் இடத்தில் அவர்கள் இன்னமும் பொருதும் மல்லர்களாகவே இருந்தார்கள்.

○ ○ ○

"அண்ணி, எனக்குப் பால்ல கொஞ்சம் மஞ்சப் பொடி போட்டுத் தர முடியுமா?" - சிஷ்யன் சோமு சமையலறைக்குள் வந்து கேட்டான்.

"ஏன், உடம்பு சரியில்லையா?"

"ரெண்டு தும்மல் போட்டுட்டேன் அண்ணி."

சோமுவின் கையில் அந்த வளையல் இன்னும் இருந்தது.

அது மூன்று வருடத்துக்குமுன் நடந்த சமாசாரம். ஷண்முகம் வெளியூர் போயிருந்தபோது, சோமு அவளிடம் அவள் இயற்றிய வர்ணம் கற்றுத் தர வேண்டுமென்று நச்சினான். அவள் சொல்லிக் கொடுத்தாள். ஒரு சிறு நிகழ்ச்சியில் அவள் பெயரைக் குறிப்பிட்டு அதை அவன் பாடினான். ஒரு பிரபல வித்வான் தற்செயலாக நிகழ்ச்சிக்கு வந்திருந்தார். அவர் பாடும் மேடையில் பெண்கள் இருக்கக் கூடாது என்று விடாப்பிடியான கொள்கை வைத்திருந்தார். "என்னப்பா, பொம்மனாட்டி கிட்டப் பாடம் கத்துக்க ஆரம்பிச்

சாச்சா? ஒரு காரியம் பண்ணு. ரெண்டு வளையலை மாட்டிண்டுடு" என்றாராம் கிண்டலாக.

"வளையலுக்கென்னண்ணா? இதோ இப்பவே மாட்டிக்கிறேன்" என்று விட்டு விடுவிடுவென்று போய் பக்கத்திலிருந்த நகைக் கடையிலிருந்து இரண்டு வெள்ளி வளையல்களை வாங்கிப் போட்டுக் கொண்டு வந்துவிட்டான் சோமு. அப்படி அவரை அவமதித்ததற்கு ஷண்முகம் அவனைப் பிறகு கடிந்து கொண்டார். சோமு வளையலைக் கழற்ற மறுத்துவிட்டான்.

சோமு பால் குடித்துக் கொண்டிருக்கும்போது ரங்கசாமி வந்தி ருப்பதாக இன்னொரு மாணவன் வந்து சொன்னான். அதற்குள் ரங்கசாமி உள்ளேயே வந்துவிட்டார்.

"செண்பகம்மா, ஒரு தப்பு நடந்துபோச்சு" என்றார் படபடப்புடன்.

"என்ன விஷயம்?" என்று கேட்டவாறே சமையலறையை ஒட்டிய கூடத்தில் வந்து அமர்ந்து அவரையும் அமரச் சொன்னாள் செண்பகம்.

"ஒரு மாசமா நான் ஊர்ல இல்ல. ஷண்முகம் அண்ணாவோட கச்சேரி தேதியக் குறிச்சுட்டு நான் வெளியூர் போயிட்டேன். என் கீழ இருக்கறவர பக்கவாத்தியத்துக்கு ஏற்பாடு பண்ணச் சொல்லியி ருந்தேன். அவர் கொஞ்சம் புதிசு. சம்பிரதாயம் தெரியாது. அவர் வந்து ... தெரியாம ... பொம்பளை ஆர்ட்டிஸ்டா போட்டுட்டார். வயலின், கடம் ரெண்டும் லேடீஸ்தான். நான் இப்பத்தான் வரேன். என்ன செய்யிறது?'' என்றார்.

"சங்கீதத்துல ஆம்பிள என்ன பொம்பள என்ன சார்? எங்கய்யா குடும்பத்துல பொம்பளைங்க மிருதங்கம், கஞ்சிரா எல்லாம் வாசிச்சி ருக்காங்க. பொம்பளைங்க ராகம், தானம், பல்லவி எல்லாம் பாட வேண்டிய அவசியமில்லேனிட்டு சொன்ன காலத்துல இவங்க வம்சத்துப் பொம்பளங்க ராகம் பாடி, ஸ்வரமும் போட்டிருக்காங்க. இவங்க பெரிய பாட்டியே இப்படி ஸ்வரம் பாடினவங்கதான். எங்கய்யா பிள்ளை இவர். ஒன்னும் சொல்ல மாட்டார். போங்க" என்று அனுப்பிவைத்தாள்.

சோமு வெள்ளி வளையலை நெருடியபடி நின்றான்.

சரிகைச் சால்வை ஜொலிக்க மேடையேறி வணங்கிவிட்டு அமர்ந்து, தன்னிரு பக்கமும் உள்ள பக்கவாத்தியக் கலைஞர்கள் மேல் கண்களைச் சுழலவிட்ட ஷண்முகத்தின் முகத்தில் சிறு திகைப்பு ஏற்பட்டது. இதற்குள் ரங்கசாமி கலைஞர்களை அறிமுகம் செய்வித்தார்.

முதல் பாடலை ஆரம்பித்து, சோமு தன்னுடன் இணைந்து பாட இடைவெளியை ஷண்முகம் விட்டபோது, சோமு எங்கேயோ பராக்குப் பார்த்தபடி இருந்தான். ஷண்முகம், இணைவதற்கான இடைவெளியை இரண்டாம் முறை ஏற்படுத்தியபோதும் சோமு கவனிக்காமல் இருந்தான். அரை நொடி கழித்து சோமுவுக்கான மைக் பக்கம் சாய்ந்து ஷண்முகம் பாடிய வரியை மீண்டும் பாடி இணைந்து கொண்டாள் செண்பகம். திடுக்கிட்டுத் திரும்பிய ஷண்முகத்தின்

கண்களுக்குள் தன் பார்வையைப் பாய்ச்சினாள் செண்பகம். முகம் விகசிக்கப் புன்னகைத்தாள். அவையினர் கரவோசை எழுந்தது. ஷண்முகம் எதிர்பாராத தருணத்தில் ஒரு சிக்கலான பிடியில் மல்லாத்தப்பட்டவர் போல் அவளைப் பார்த்தார். சோமு சட்டென்று அவள் கையிலிருந்து தம்பூராவை வாங்கி மைக்கை அவள் முன் நகர்த்தினான். அடுத்த அடியைச் செண்பகமே எடுத்தாள்.

அந்த ஏ.ஸி. அறையிலும் ஷண்முகத்திற்கு வியர்த்ததா என்று தெரியவில்லை. தோள்களைச் சுற்றி இருந்த சரிகைச் சால்வையைக் கழற்றிக் கீழே வைத்துவிட்டுப் பாட ஆரம்பித்தார் செண்பகத்துடன்.

**'காலச்சுவடு' 14, ஜூன் 1996**